REGD No- TN MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone 812818 4 பக்கம் விலை 35 காசு



**நாட்டுப்பற்று**

நாடு நலமாகவும், வளமாகவும் இருக்கப் பாடுபடும் செயல் தான் நாட்டுப் பற்று கும்!

-பேரறிஞர் அண்ணா




**வாழ்க்கை**

தமது வாழ்க்கையால் பிறர் துன்பம் அடையாவண்ணம் நடந்து கொள்ள வேண்டும். இதையே மனித வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்டு நடக்க முயற்சிக்க வேண்டும்.

-தந்தை பெரியார்

● மலர் 5 சென்னை 18—11—1980 செவ்வாய் —:(✻):— வெளியீடு 19—11—1980 புதன் இதழ் 32 ●

சென்னை நகர வட்டக்கிளைக் கழகத் தேர்தல் முடிவுகளை கேட்க நேற்று (17-ந்தேதி) தலைமைக்கழகம் முன்பு கொட்டும் மழையிலும் கூடியிருந்த ஆயிரக்கணக்கான கழகத் தொண்டர்கள்.

## சென்னை கழகத் தேர்தல்:

# முடிவு தெரிந்த வட்ட நிர்வாகிகள் விவரம்

சென்னை, நவ. 18- சென்னையில் நடந்த வட்டக் கழகத் தேர்தலில் இதுவரை முடிவு தெரிந்த வட்டங்களின் தேர்தல் முடிவு விவரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.



### 5-வது வட்டம்

அவைத்தலைவர் பி. கே. எம். முகமதுகோயா, செயலாளர் பெருமாள், துணைச் செயலாளர் அழகர், பொருளாளர் சந்திரசேகர்

மேலமைப்புப் பிரதிநிதிகள்: கே ஐயனுர், டி. பன்னீர்செல்வம், முனியம்மாள், திலிப்குமார், ராமசாமி, அண்ணுமலை.

### 36-வது வட்டம்

அவைத்தலைவர் - அழகரசன். செயலாளர்:- சீதாராமன், துணைச்செயலாளர்- இலக்குமிபதி, பொருளாளர் இஸ்மாயில்

மேலமைப்புப் பிரதிநிதிகள் மாதவன், எத்திராசன், கர்ணன், அண்ணுமலை வத்சலா, கலாரமேஷ்

### 20-வதுவட்டம்

அவைத்தலைவர் ஏ,கே.ராசன், செயலாளர்: கண்ணுயிரம், துணைச்செயலாளர்: தீனதயாளன், பொருளாளர்: சந்தானம்,

மேலமைப்பு பிரதிநிதிகள் பாபாகான், சமத் ராஜன், ரகிமான், லேலி, ரங்கநாதன்.

### 27-வது வட்டம்

அவைத்தலைவர்: ராமச்சந்திரன், செயலாளர் சுந்தரம் துணைச்செயலாளர் ராஜசேகர், பொருளாளர் ஜீ. காசிநாதன்.

மேலமைப்புப் பிரதிநிதிகள் சாந்திவரதன் ராமலிங்கம், ராதாகிருஷ்ணன், சுந்தரமூர்த்தி, கோவிந்தன், மாரி.

### 28-வது வட்டம்

அவைத்தலைவர்- எம். டி. ரங்கநாதன், செயலாளர் ஜெயக்குமார், துணைச் செயலாளர் நித்தியானந்தம், பொருளாளர் சி.எஸ். நாயர்,

மேலமைப்புப் பிரதிநிதிகள், வடிவழகன், ராசாராம், உமாகாந்தன், பிரபு, தேவேந்திரன்,

### 19-வது வட்டம்

அவைத்தலைவர் எஸ் கணேசன், செயலாளர் மோகனசுந்தரம், துணை செயலாளர் எஸ். எல்லப்பன், பொருளாளர் டேவிட்.

மேலமைப்பு பிரதிநிதிகள் ஆறுமுகம், குமார், பச்சையம்மாள், லட்சுமி காந்தன், ராமச்சந்திரன் ரெங்கராஜ்

### 23-வது வட்டம்

அவைத்தலைவர் மாணிக்கம் செயலாளர் -

துணைச்செயலாளர் வியசர் நாராயணன், பொருளாளர் எஸ் ஏ சூசை

மேலமைப்புப்பிரதிநிதிகள் அப்துல் ஜபார், ராஜு உமாபதி, கேசவன், கிருஷ்ணன், கன்னியம்மாள்

### 25-வது வட்டம்

அவைத்தலைவர் கோவிந்தராஜன், செயலாளர் ஜெயப்பிரகாசம், துணைச்செயலாளர் டி. எஸ். எஸ். ராஜு பொருளாளர் சூசை

மேலமைப்புபிரதிநிதிகள் இஞ்சாசி, அரங்கசாமி, வணக்கமேரி, அ.சு. மணி, வி. மூர்த்தி எம். சுந்தரம்

### 22-வதுவட்டம்

அவைத்தலைவர்: சண்முகம்,

செயலாளர் கே. எல். கோவிந்தராஜன். துணைச் செயலாளர் லோகநாதன் பொருளாளர்- சி. பாலன்.

மேலமைப்புப் பிரதிநிதிகள்: எம். பாலன், கலைவாணி, பெருமாள், சிவலிங்கம், அஸ்லாம், சீராளன்.

### 30-வது வட்டம்

அவைத்தலைவர் ஏ.எஸ். முருகன், செயலாளர் வேலு பாண்டியன்! துணைச்செயலாளர் பாலகிருஷ்ணன், பொருளாளர், ஜெய்ஆனர்

மேலமைப்புப் பிரதிநிதிகள் சோமசுந்தரம். கன்னிகா, தமிழ்மணி, ராமநாதன், வேணுகோபால், ரங்கசாமி.

### 31-வது வட்டம்

அவைத் தலைவர்: அன்பு, செயலாளர் பன்னீர் செல்வம், துணை செயலாளர் மணியன்பொருளாளர்மணி

மேலமைப்புப் பிரதிநிதிகள்: ஜீவா, வஜ்ரவேலு, எம். தயாளன், லட்சுமி அம்மாள், பூபதி, இன்பசேகரன்.

### 43-வது வட்டம்

அவைத்தலைவர் கோவிந்தசாமி, செயலாளர் தாமோதரன் துணைச்செயலாளர் ஆர்- ரங்கநாதன், பொருளாளர் ஜி. முனுசாமி, மேலமைப்புப் பிரதிநிதிகள் அப்துல்காதர், கருணாகரன், கோதண்டபாணி, பொன்னம்மாள், சுந்தரம், சத்தியமூர்த்தி,

### 39-வது வட்டம்

அவைத்தலைவர் ஆறுமுகம் செயலாளர் முருகன் துணைச் செயலாளர் ஹென்றி, பொருளாளர் பாலன்

மேலமைப்பு பிரதிநிதிகள் மு. பாண்டியன். நாகப்பன், தாமோதரன். மதிவாணன். ஜோதி, முனியம்மாள்.

### 29-வது வட்டம்

அவைத்தலைவர் பி.எஸ். ஏழுமலை, செயலாளர் சுப்பிரமணி, துணைச்செயலாளர் சதானந்தம், பொருளாளர் கன்னையன்

மேலமைப்புப் பிரதிநிதிகள்- தாமோதரன், கே. கருணாகரன், பிரகாசம், சரோஜினி, முத்து பிரம்பை மொய்தீன்,

### 48-வது வட்டம்

அவைத்தலைவர் விஜயன் செயலாளர் கஜேந்திரபாபு துணைச்செயலாளர் அமீர் பாட்சா பொருளாளர் சேட் முகமது

மேலவமப்புப் பிரதிநிதிகள் சத்தியசிலன்ரவி, மார்கேஸ் வெங்கடேசன், பூங்கோதை தியானேஸ்வரன்

### 41 வதுவட்டம்

அவைத்தலைவர் கோவிந்தசாமி

செயலாளர் முத்தரசன், துணைச்செயலாளர் ஜானகிராமன், பொருளாளர் ரஜேந்திரன்.

மேலமைப்புப் பிரதிநிதிகள் ஏகாம்பரம், பாஸ்கரன் மாசிலாமணி, வளையாபதி, விக்னேஸ்வரன், ஜோதி லிவிங்ஸ்டன்.

### 34வது வட்டம்

அவைத் தலைவர் மணிவண்ணன், செயலாளர் உ. ஜானகிராமன், துணைச் செயலாளர் சி வி. பாலன், பொருளாளர் எம் சி எம் ஜானகிராமன்.

மேலமைப்புப் பிரதிநிதிகள் கணேசன். கோபாலகிருஷ்ணன், நம்பேடான். வி நடராஜன். மு மணி. பூசணவள்ளி.

### 53-வது வட்டம்

அவைத்தலைவர் பாபு, செயலாளர் கே. எல்லப்பன், துணைச்செயலாளர் வேலாயுதம், பொருளாளர் பால்ராஜ்.

மேலமைப்புபிரதிநிதிகள் பி. சுப்பிரமணி செங்கல்வராயன், ஏழுமலை, துரை, நீலாவதி, சீனிவாசன்

### 37-வது வட்டம்

அவைத் தலைவர் ஆ. தாமோதரன், செயலாளர் எத்திராசன் துணைச்செயலாளர்- அருள் ஜோதி, பொருளாளர்- ஸ்ரீதரன்.

மேலமைப்புப் பிரதிநிதிகள்- சந்திரசேகரன், பென்னி, ரவீந்திரனூர், கண்ணன், கே. எஸ். சந்திரசேகர், மரகதம்

### 33-வது வட்டம்

அவைத்தலைவர் வீரராகவன், செயலாளர் சேகரன் துணைச்செயலாளர் காருண்யம், பொருளாளர் சாரங்கபாணி

மேலமைப்புப் பிரதிநிதிகள் வீர சுப்பையா. ஏழுமலை. ஆனந்தன், வெங்கடேசன், கணேசன், சகுந்தலா

### 51வது வட்டம்

அவைத்தலைவர்- கவிஞர் பைத்தியம், செயலாளர்- எம். எஸ். மணி, துணைச் செயலாளர்- அயாத் பாஷா, பொருளாளர்- காதர்முகைதீன்.

மேலமைப்புப் பிரதிநிதிகள்- ராமச்சந்திரன், வள்ளியம்மாள், மனோகரன், சின்னப்பா, ராஜேந்திரன், பன்னீர்செல்வம்

### 47 வதுவட்டம்

அவைத்தலைவர் ராஜேந்திரசோழா, செயலாளர் காதர், துணைச்செயலாளர் கோகுலநாதன்.

பொருளாளர் ராஜன், மேலமைப்புப் பிரதிநிதிகள் ஜி. ஏழுமலை, செனுவுல்லா, கமலம், கலைமணி, பத்மநாபன், முருகேசன்.

### 50 வது வட்டம்

அவைத்தலைவர் அண்ணுதுரை, செயலாளர் துரை, துணைச்செயலாளர், பொன்னுசாமி, பொருளாளர் கலியபெருமாள்.

மேலமைப்புப் பிரதிநிதிகள் ஆசைத் தம்பி சி. கே. வில்வன் அந்தோணி, வேதாசலம், ஜமால்புகாரி. கவுரி.

### 52-வது வட்டம்

அவைத்தலைவர்

(3ம் பக்கம் பார்க்க)

## கருணாநிதியின் பொய்ப் பிரச்சாரத்திற்கு

# மத்திய அரசு தந்த மரண அடி

## புரட்சித்தலைவர் கருத்துரை

**கோயமுத்தூர், நவ. 18-கவர்னர் நியமனம் பற்றி கருணாநிதி செய்துவந்த பொய்ப் பிரச்சாரத்துக்கு மத்திய அமைச்சர் தந்த மரண அடி பற்றி முதல்வர் புரட்சித்தலைவர் குறிப்பிட்டார்.**



கோவை பொற்கொல்லர்கள் சங்கத்தின் தங்க மாளிகையைத் திறந்து வைத்து முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:

மற்றவர்களைப் போல தேர்தல் நேரத்தில் கொடுத்த வாக்குறுதிகளை மறப்பவர்கள் நாம் அல்ல. வாக்குறுதிகளைக்கொடுத்து ஏமாற்றி வாக்குகளைப் பெற்றுவிட்டு பிறகு மக்களைச் சந்திக்காமல் முடங்கிவிடுபவர்கள் நாம் அல்ல.

உண்மைக்குப் புறம்பாகப் பேசி ஏமாற்றுபவர்களை நாடு புரிந்துகொண்டு வருகிறது.

இதற்கு ஒரு சிறு உதாரணம். நாங்கள் ஆட்சிசெய்த நேரத்தில் தமிழகஅரசுக்கு இருந்த மரியாதையை விட்டுக் கொடுத்து விட்டதாக கருணாநிதி அவர்கள் கட்டுரை எழுதினர்.

இப்போது கவர்னராக வந்திருக்கிற சாதிக்அலி பற்றி இந்த அரசுக்கு தெரியாது என்றுகட்டுரைத் எழுதினர்.

### கேவலமான பொய்யான கட்டுரை

இவர் இந்திராகாந்தியை பார்த்து உடனேயே பட்வாரியை நீக்கியதாகவும், இந்திராகாந்தி என்னைக்கலந்து பேசவில்லை என்றும் சாதிக் அலி நியமன விஷயம் எனக்கு தெரியாது என்றும் மிகக் கேவலமான பொய்யைக் கட்டுரையாக எழுதினர்.

"யார் ஆத்தாள் செத்தாலும் பொழுது விடிந்தால் தெரியும்" என்று சொல்வார்கள்.

இவர் எழுதுகிற பொய்க்கெல்லாம் பதில்தருவதை விட மக்களுக்குத் தொண்டாற்ற எங்களுக்குப்பல வேலைகள் இருக்கின்றன.

சாதிக்அலி நியமனம் பற்றி கட்டுரையில் மாமன்னர் என்றும் குறு நில மன்னர் என்றும் என்ன வெல்லாமோ எழுதினர்.

அவரை நம்பி ஏமாந்துள்ள அவரது கட்சியினர் ஆகா கருணாநிதி இருந்தால் இவரைக் கேட்டு அல்லவா மாற்றி இருப்பார்கள்.

எம்.ஜி.ஆர். இருப்பதால் கேட்கவில்லை என்று நம்ப வைக்கப் பார்த்தார்.

### மத்திய மந்திரி மரண அடி தந்தார்

ஆனால் மத்திய மந்திரி ஜெயில்சிங் இதற்குப் பதில் சொல்லி இருக்கிறார்.

தமிழக அரசைக் கலந்து தமிழக அரசுக்குத் தெரியப்படுத்தித்தான் ஆளுநரை மாற்றியதாகவும், புது ஆளுநரை நியமித்ததாகவும் கூறினர்.

ஆனால் நான் இதுபற்றி பேசாமல் இருந்தேன்.

அவரது கட்சிக்காரர்கள் உண்மை தெரியாமல் ஏன் எழுதினீர்கள் என்று கருணாநிதியைக் கேட்டனர்!

இதை ஏன் முன்பே எம். ஜி. ஆர். சொல்லவில்லை என்கிறார்.

இவர் பொய்யை கட்டுரையாக எழுதுவார். அதற்கு நான் பதில் சொல்லவேண்டுமா?

நீங்கள் எங்களுக்கு ஓட்டுப்போட்டது ஒழுங்காக ஆட்சியை நடத்தத்தான். அவர் சொல்லும்பொய்க்கு பதில் அளிக்க அல்ல.

### விவசாயிகட்கு துரோகம் செய்தவர்

நாராயணசாமி நாயுடுவை எதேச்சாதிகாரி என்றார் கருணாநிதி. தேர்தல் நேரத்தில் அவர் நடுநிலை என்றதும் ஆத்திரப் பட்டார்.

ஆனால் இப்போது விவசாயிகளிடம் வரியை வசூலிக்கலாமா என்றுஇரக்கப் பட்டுக் கேட்கிறார்.

இன்று இப்படிபேசுபவர் தான் மின் கட்டணத்தை 16 காசாக ஆக்கினர்.

அதை நாங்கள் 12 காசாக 14 காசாக குறைத்தோம்.

இப்படிச் செய்த எங்களைப் பார்த்து விவசாயிகளுக்கு அக்கிரமம் செய்வதாக கூறுகிறார்.

### யானைக்கு தீனி போடும் விவசாயி

யானையை வைத்து தீனி போடும், பெரியவிவசாயிகள் இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களிடம் வரியை வசூலிக்கக் கூடாதா?

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

# நினைவில் வைத்து கொள்ளுங்கள்!

விலைவாசி உயர்வுக்கு எதிர்ப்புத் தெரிவித்து நாடாளுமன்றத்தில் எதிர்க்கட்சிகள் வெளி நடப்புச் செய்தன.

தி. மு. க. வெளி நடப்புச் செய்ய வில்லை.

நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்!

### தமிழ் நாட்டில் எல்லா குழந்தைகளுக்கும் கல்வி அளிக்க

# ஏழைபெற்றோருக்குநிதியுதவி

## புரட்சித்தலைவரின் திட்டம்

## அமைச்சர் ஆர்.எம்.வீ. அறிவிப்பு

**மதுரை, நவ. 18- குழந்தைகளின் வருமானத்தை நம்பியுள்ள ஏழைபெற்றோர்களுக்கு நிதியுதவி அளித்து அவர்களின் குழந்தைகளை பள்ளிக்குஅனுப்ப வழிசெய்வது குறித்து கழக அரசு ஆலோசித்து வருவதாக அமைச்சர் ஆர். எம்.வீ கூறினார்.**

ராமநாதபுரம்மாவட்டம் களக்காவூர் என்ற இடத்தில் ஆரம்பப்பள்ளியின் புதியக் கட்டிடத்தைத் அமைச்சர் ஆர். எம். வீ. திறந்து வைத்தார்.

அப்போது பேசுகையில் அவர் கூறியதாவது:

குழந்தைகள் உழைத்து பணம் சம்பாதிக்கின்றன. என்ற காரணத்தால் ஏழை பெற்றோர்கள், தங்கள் குழந்தைகளை பள்ளிக்கு அனுப்பாமல் இருப்பதாக கூறப்படுகிறது.

குழந்தைகளின் வருமானத்தை நம்பி இருக்கிற நிலைமையை ஏழை பெற்றோருக்கு போக்க, அவர்களுக்கு நிதியுதவி அளிப்பது பற்றி கழக அரசு ஆலோசித்து வருகிறது.

### அரசின் நோக்கம்

எல்லா குழந்தைகளும் 10-வது வகுப்பு வரை படிக்க வேண்டும் என்பதே புரட்சித் தலைவரின் கழக அரசின் நோக்கமாகும்.

இவ்வாறு அமைச்சர் ஆர். எம். வீ. பேசினார்.

### மக்களுக்கு ஆற்றும்

# கடமையிலிருந்து பின் வாங்க மாட்டோம்

### முதல்வர் புரட்சித்தலைவர் உறுதி

கோவை, நவ. 18- யார் என்ன குற்றச் சாட்டைச் சொன்னாலும் எங்கள் கடமையிலிருந்து பின்வாங்க மாட்டோம் என்று முதல்வர் புரட்சித்தலைவர் முழக்கமிட்டார்:

கோவை ரவுண்டேபிள் இருபதின் சார்பில் ரூ. 3 லட்சம் செலவில் வெள்ளலூரில் கட்டப்பட்ட மருத்துவமனையையும், முதியோர் கல்விக் கூடத்தையும் முதல்வர் புரட்சித் தலைவர் நேற்று இரவு திறந்து வைத்தார்.

கோவையை அடுத்துள்ள வெள்ளலூரில் நடந்த இந்த நிகழ்ச்சியில் மக்கள் கடல்எனத்திரண்டு வந்திருந்தனர்.

விழாவுக்கு அமைச்சர் அரங்கநாயகம் தலைமை வகித்தார்,

அமைச்சர்கள் குழந்தைவேலு, முத்துசாமி, மாவட்ட ஆட்சித்தலைவர் சிவப்பிரகாசம் ஆகியோரும் பேசினார்கள்.

விழாவில் முதல்வர்புரட்சித்தலைவர் பேசியதாவது:

இங்கே பேசியவர்கள் தேர்தல் காலத்தில் நாங்கள் கொடுத்த வாக்குறுதிகளை நிறைவேற்றி வருவதாகக் கூறினார்கள்.

யார் என்ன குற்றச்சாட்டைச் சொன்னாலும் எங்கள் கடமையில் இருந்து நாங்கள் பின் வாங்கமாட்டோம்.

ரவுன்டேபிள், அரிமா சங்கம் ரோட்டரி கிளப்புகள்போன்ற அமைப்புக்கள் நல்லதொண்டினைச் செய்து வருவது பாராட்டுக்குரியது.

பாராட்டினை எதிர்பாராமல் இப்படிப்பட்ட செயல்களைச் செய்து வருகிறார்கள்.

அரசின் உதவி, இப்படிப்பட்ட இயக்கங்கள் செய்யும் நல்ல காரியங்களுக்கு உண்டு.

இப்படிப்பட்ட காரியங்களைச் செய்ய அவர்களுக்குப் பற்றுக்குறை வந்தாலும் அரசு துணை நிற்கும்.

இந்த இயக்கத்தில் தாய்மார்களும் பங்குபெற்றுள்ளது பாராட்டுக்குரியது. இந்தப் போட்டி வளரட்டும் அதன்மூலம்மக்களுக்கு நன்மை கிடைக்கும்,

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

இந்தவிழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் நலிந்தப் பகுதி மக்களுக்கு பல்வேறு உதவிகளை வழங்கினார்.

213 பேர்களுக்கு வீட்டு மனை பட்டா. 26 பேர்களுக்கு முதியோர் உதவித் தொகை. ஊனமுற்றவர்களுக்கு 3சக்கர வண்டிகள், விவசாயிகட்கு விவசாய கருவிகள், முதலியவைகளைவழங்கினார்.

### அமைச்சர் ராஜாமுகமது நிகழ்ச்சிகள்

21-11-80மாலை5மணிக்கு உலகத்தமிழ் மாநாடு விருந்தோம்பல் குழுக் கூட்டம்.

22-11-80காலை10மணிக்கு உலகத்தமிழ் மாநாடு பிரதிநிதிகள் தங்கும்இடங்களை பார்வையிடுதல்

இரவு 7மணிக்கு ஆண்டிப்பட்டி, பொதுக்கூட்டம்.

23-11-80 காலை 10 மணி மார்க்யன் கோட்டை (சின்னமனூர்)பாண்டியன் இல்லத் திறப்பு விழா. மாலை 4 மணி பழனி, சிட்டிப்பட்டிதிரையரங்கம் திறப்பு விழா, மாலை 6 மணி திண்டுக்கல்.

24-11-80 காலை 11 மணிக்கு நெல்லை ஜம்புநதி அணைக்கட்டு, நாராயண (திம்மனம்பட்டி) பேரிகால் வாய் திட்ட அடிக்கல் நாட்டுவிழா.

### பொது அறிவிப்பு

**கனரக வாகன தொழிற்சாலை, ஆவடி சென்னை-600054.**

கனரக வாகன தொழிற்சாலையில், மெஷினிஸ்ட் "C" யாக பணிபுரியும் டோக்கன் எண் 72164-4846 திரு. எஸ். ராமலிங்கம் என்பவர் 27-2-80 தேதிமுதல்வேலைக்கு வராமல் இருப்பதனால், அவ்வாறு வேலைக்கு வராத காரணத்தினால் 22-8-80 தேதியன்று HVF மெமோ எண்: ESTT/80-112ன் படி ஒரு சார்ஜ் ஷீட் அளிக்கப்பட்டது. மேற்படி மெமோ அவரது சர்வீஸ் பத்திரங்களில் காணப்படும் கீழ்க்காணும் விலாசத்திற்கு பதிவுத்தபால் மூலம் அனுப்பப்பட்டு தபால் அதிகாரிகளால் கீழே ஒவ்வொன்றின் எதிராக குறிப்பிட்டுள்ள காரணங்களுக்காக திருப்பி அனுப்பப்பட்டுள்ளது.

1. பனகல்நிலையம், 5, பெரியார்சாலை, எல்டாம்ஸ்ரோடு சென்னை-18
   "இந்த விலாசத்தில் இல்லை"
2. வடக்குரத வீதி கூமாப்பட்டி, ராமநாதபுரம் மாவட்டம்
   "இம்மாதிரி விலாசதாரர் இல்லை"

எனவே, தற்போது, பொது நிர்வாகி அவர்கள் இதன் மூலம் தெரிவிப்பது யாதெனில் இந்த அறிவிப்பு வெளியான தேதி முதல் ஒரு மாத காலத்திற்குள் மேற்கண்ட திரு. எஸ். ராமலிங்கம் என்பவர், அவர், பதவியிலிருந்து ஏன் பதவி நீக்கம் செய்யப்படக் கூடாது என்பதற்கான காரணங்களை, தெரிவிக்க வேண்டும். மேற்கண்டவாறு குறிப்பிட்ட காலத்திற்குள் எவ்வித பதிலும் கிடைக்கப் பெறாவிடில், அவர் மீது 1965ம் வருட CCS (CC&A) விதிகள் விதி 19 (ii)ன்படி மேற்கொண்டு நடவடிக்கை எடுக்கப்படும்.

DAVP 685 (603)80

# தாழ்த்தப்பட்டோருக்குள் போட்டி ஏற்பட்டு எரித்து கொள்வதா?

### முதல்வர் புரட்சித்தலைவர் வேதனை

**கோவை, நவ. 18- தாழ்த்தப்பட்ட மக்கள் தங்களுக்குள்ளே சண்டை போட்டு 3 பேரை எரித்துக் கொண்டிருப்பது வேதனை தருகிறது என்று முதல்வர் புரட்சித்தலைவர் உருக்கமாகக் கூறினார்.**

கோவையில் நடந்த காவலர், பொது மக்கள் சமுதாய சேவை திட்ட நிறைவு விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:-

அண்ணா இருந்தபோது தஞ்சை கீழ் வெண்மணியில் நடந்தசோகநிகழ்ச்சிக்குப்பிறகு இப்போது சில நாட்களுக்கு முன்பு 3 உயிர்கள் உயிரோடு கொளுத்தப்பட்டுள்ளன.

அவர்கள் எந்தக் கட்சியைச் சேர்ந்தவர்களாக இருந்தாலும் இந்த செய்தி கேட்டு உள்ளம் அதிர்ச்சிகொள்கிறது. வேதனை அடைகிறேன்.

நெஞ்சத்தில் அச்சம் சுமந்து தள்ளாடும் நிலை ஏற்படுகிறது.

அங்கே இந்த சம்பவத்தில் ஈடுபட்ட இருதரப்பினரும் தாழ்த்தப்பட்ட வருப்பைச் சேர்ந்தவர்கள்.

இது அரசியல் கட்சியின் அடிப்படையில் ஏற்பட்டதா? அல்லது வேறு காரணத்தால்ஏற்பட்டதா என்பது விசாரணையில் தெரியும்.

எந்தக் காரணத்திற்காக இது நடந்தாலும் வேதனையைக் கொடுத்துள்ளது.

தாழ்த்தப்பட்ட இனத்தாருக்குள்ளேயே போட்டி ஏற்பட்டு 3 பேர்கள் எரித்து சாகடிக்கப்பட்டு இருக்கிறார்கள்.

நாம் தமிழகத்தில் தான் இருக்கிறோமா? மகாத்மா காந்தியடிகள், தந்தை பெரியார் கொள்கைகளைப் பின்பற்றுகிறோமா?

பேரறிஞர் அண்ணா சொன்ன ஒன்றே குலம், ஒருவனே தேவன் என்ற தத்துவத்தைப் பின்பற்றுகிறோமா?

இப்படிப் பட்டவர்களது கொள்கைகளை சமுதாயத்தில் பரப்பி ஒற்றுமை ஏற்படுத்த பலதியாகங்களை நாம் செய்யவேண்டியவர்களாக இருக்கிறோம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

### மக்களுக்கே தந்தார்

கோவை, நவ. 18- மக்கள் அளித்த வெள்ளிவாள் வெள்ளிச் செங்கோல், கேடயம் முதலியவைகளை வாரி வாரி வழங்கிப் பழக்கப்பட்ட முதல்வர் புரட்சி தலைவர் அவைகளை மக்களுக்கேதிரும்ப அளித்தார்.

நேற்று கோவை ராணுவ வீரர்கள் அணிவகுப்புவிழாவில் கோவை மக்கள் சார்பில் வெள்ளியில் செய்யப்பட்ட வீரவாள் ஒன்றினைப் பரிசாக முதல்வர் புரட்சித்தலைவரிடம் அளித்தனர்.

அந்தப்பரிசை காவல் துறையினரோடு ஒத்துழைத்து குற்றங்களைக் கண்டு பிடிப்பவர்களுக்கு வழங்குமாறு முதல்வர் புரட்சித் தலைவர் வழங்கினார்.

போலீஸ் - பொதுமக்கள் சமுதாய திட்ட சேவை நிறைவு விழா நேற்று கோவையில் நடந்தது.

அந்த விழாவில் முதல்வர் புரட்சித்தலைவருக்கும் அமைச்சர்கள் அரங்கநாயகம், குழந்தைவேலு, முத்துசாமி ஆகியோருக்கும் நினைவுக்கேடயங்கள் வழங்கப்பட்டன.

தனக்கு அளிக்கப்பட்டக் கேடயத்தையும், அமைச்சர்களுக்கு அளிக்கப்பட்ட கேடயங்களையும் மாணவர்களுக்குப் பரிசாக வழங்க முதல்வர் புரட்சித்தலைவர் திருப்பிக் கொடுத்தார்.

காவல்துறை பொது மக்கள் சமுதாய திட்டத்தின் கீழ் அடுத்த ஆண்டு இந்த அடிப்படையில் சிறப்பாக பங்கு பெறுபவர்களுக்கு பரிசாக அளியுங்கள் என்று திருப்பிக் கொடுத்தார்.

இதுமட்டுமல்லாமல் 5 ஆண்டுக்காலம் தொடர்ந்து இப்படிப்பட்ட பணியைப் புரிவோருக்கு சுழற்கோப்பை அளிக்கப்படவேண்டும் என்றும் முதல்வர் குறிப்பிட்டார்.

குற்றங்கள் கண்டுபிடித்தல் குற்றங்கள் நேராமல் தடுத்தல், நாட்டில் அமைதியை உருவாக்குதல்போன்ற பணிகளில் போலீசாரோடு அதிகம் ஒத்துழைத்தவர்களுக்குஇந்தசுழற்கோப்பை அளிக்கப்பட வேண்டும்

இன்றுகாலை நிகழ்ச்சியில் பொதுமக்கள் சார்பில் ஒரு வேள்ளிவாள் எனக்குப் பரிசாகத் தரப்பட்டது.

இதையே அந்தப் பரிசாக அளிக்க ரோடரி சங்கத் தலைவரிடம் அதை ஒப்படைக்கிறேன்.

(ரோடரி சங்கத் தலைவரிடம் வெள்ளிவாளை அளித்தார். பலத்த கைதட்டல் அப்போது எழுந்தது)

5ஆண்டுகள்தொடர்ந்து பெறுபவர்கட்கு இது சொந்தமாகும் என்றார் முதல்வர் புரட்சித்தலைவர்

# வெள்ளம் போல் மக்கள் கூடி புரட்சித்தலைவரைவரவேற்றமாட்சி

கோவை, நவ. 18. கோவை நகரிலும், கோவை அடுத்த வெள்ளலூரில் நடந்தநிகழ்ச்சிக்கும் முதல்வர் புரட்சித்தலைவர் சென்றபோது வழிஎங்கும்மக்கள் ஆயிரமாயிரமாகக்கூடி நின்று வரவேற்றனர்.

மக்கள் வெள்ளத்தினிடையேமுதல்வர் நீந்தி பவனி வருவது போல வந்தார்.

மக்கள், மகிழ்ச்சியில் திளைத்துகரவொலிஎழுப்பி மகிழ்ந்தனர்.

ஆண்களோடு பெண்களும் போட்டியிட்டு வழி எங்கும் அணிவகுத்து நின்று வரவேற்றனர்.

வெள்ளலூரிலும், மற்றும் பல இடங்களிலும் தாய்க்குலத்தினர் குட ஆரத்தி எடுத்து வரவேற்றனர்.

விபத்தில் சிக்கி காயம் அடைந்து கோவை மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வரும் மேட்டுபாளையம் தொகுதி கழக எம். எல். ஏ., பழனிச்சாமியை முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று மாலை சென்று பார்த்தார்.

கோவை மருத்துவக் கல்லூரி மருத்துவ மனையில் பழனிச்சாமி சிகிச்சை பெற்று வருகிறார்.

மருத்துவமனைக்கு முதல்வர் புரட்சித்தலைவர் வந்தபோது மக்கள் பெரும் அளவில் திரண்டு நின்று வரவேற்றனர்.

மருத்துவமனைக்கு வெளியே இருந்த தாய்மார்கள் குறைகளைக் முவல்வர் புரட்சித்தலைவர் கேட்டார்.

பிறகு மருத்துவமனைக்குச் சென்று பழனிச்சாமியிடம் உடல்நலம் விசாரித்தார்.

முதல்வர் புரட்சித்தலைவரோடு அமைச்சர்கள் அரங்கநாயகம், குழந்தைவேலு, முத்துசாமி ஆகியோரும் சென்றனர்.

# நிர்வாகிகள் விவரம்

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

ஏ ராஜாமணிக்கம், செயலாளர் கபூர், துணைச் செயலாளர் சண்முகம், பொருளாளர் அஜீஸ், மேலமைப்புப்பிரதிநிதிகள் சீனிவாசன், தயாளன், பாலன், சின்னமணி ரோசிஉபகார மேரி ராமலிங்கம்.

**55-வது வட்டம்**

அவைத் தலைவர் திராவிடமணி செயலாளர் பாபு, துணைச் செயலாளர் மாணிக்கம், பொருளாளர் குணசேகரன் மேலமைப்புப் பிரதிநிதிகள் சேகர், செல்வராஜ், மல்லீஸ்வரன், சரஸ்வதி, பச்சையப்பன், கோபிநாத் தேவராவ்

**46-வது வட்டம்**

அவைத்தலைவர் தட்சணாமூர்த்தி. செயலாளர் ஆனந்தன், துணைச் செயலாளர் சாமிநாதன்பொருளாளர் ஆறுமுகம்.

மேலமைப்புப் பிரதிநிதிகள் பாலசுந்தரம், எம்.வி. ராமன். சி. கோ. சுந்தரம் ஜெகந்நாதன், அண்ணாதாசன், ராஜேஸ்வரி.

**44-வது வட்டம்**

அவைத்தலைவர்- இருதயநாதன், செயலாளர்- கிருஷ்ணசாமி துணைச்செயலாளர் சுபான் பொருளாளர் தினகரன் மேலமைப்பு பிரதிநிதிகள் ஆர். ராஜேஸ்வரி, காஞ்சி சண்முகம், சந்திரன், அரசு, பாலகிருஷ்ணன், தாமு

**40-வது வட்டம்**

அவைதலைவர் பெருமாள் செயலாளர் ராமன், துணை செயலாளர் நடராஜன் பொருளாளர் அப்துல்வகாப்.

மேல்மைப்புபிரதிநிதிகள் புஷ்பராஜ் பிரேம்குமார், சந்திரன், துளசி, தேவதாஸ், புகழரசு.

**24-வது வட்டம்**

அவைத்தலைவர் சி. நாராயணசாமி செயலாளர்: எம். கே. சாமிநாதன் துணைச்செயலாளர் ரா. ஜெகநாதன், பொருளாளர் குப்பன் மேலமைப்புபிரதிநிதிகள் கனிமொழியன் எ. கணேசன், குப்புசாமி சுகுமாறன் சுந்தரராஜ் மா. மணி காமாட்சி பெரியசாமி.

**1-வது வட்டம்**

அவைத்தலைவர் எம்.மோகன் செயலாளர் வடிவேலு துணைச்செயலாளர்-எல்லப்பன், பொருளாளர்-ராமையா.

மேலமைப்புப் பிரதிநிதிகள்- ஆர். கேசவன், புருடோத்தமன் உமாபதிஅங்கமுத்து ஜே. ஈ. பென்னி, வனஜா மணி,

**2.வது வட்டம்**

அவைத்தலைவர் ஏழுமலை செயலாளர் சந்தானம், துணைச் செயலாளர் பி. சண்முகம், பொருளாளர் பூபதி.

மேலமைப்புப்பிரதிநிதிகள் கே. எஸ். மணி, சங்கரமூர்த்தி, சகுந்தலா, சவுந்திரராஜன், முனியாண்டி, லியாகத்அலிகான்.

**3வது வட்டம்**

அவைத்தலைவர் ஸ்ரீதரன், செயலாளர் அருணசலம், துணைச் செயலாளர் சங்கரதாஸ். பொருளாளர் சந்திரசேகரன், மேலமைப்பு பிரதிநிதிகள் ராதாபாய், சஞ்சீவி, தசரதன், மணி, ராவ், ராமகிருஷ்ணன்.

**6-வது வட்டம்**

அவைத்தலைவர் கணபதி, செயலாளர் ராஜேந்திரன், துணைச்செயலாளர் ஜேம்ஸ் சங்கரதாஸ், பொருளாளர் பழனிவேல் மேலமைப்புப் பிரதிநிதிகள் தேவராஜ். ஆனந்தம், குப்பன், சுப்பிரமணி, கணேசன்- சுலோச்சனா,

**7வதுவட்டம்**

அவைத்தலைவர் ராதாகிருஷ்ணன் செயலாளர் சிவசங்கரன் துணைச்செயலாளர் சந்திரசேகரன் பொருளாளர் ராஜீ மேலமைப்புப் பிரதிநிதிகள் ரஜேந்திரன் எல். எஸ். மணி, முரளிதரன். துரை, தட்சிணாமூர்த்தி, ராணிசின்னசாமி,

**11 வதுவட்டம்**

அவைத்தலைவர் டி. சுப்பிரமணி

செயலாளர் பொன்ராஜ் துணைச்செயலாளர் குணசேகரன்பொருளாளர்மணி மேலமைப்பு பிரதிநிதிகள் தாஸ், ராஜேந்திரன், குப்பன், அமுல்தாஸ், அந்தோணி அம்மாள், வாசு,

**12 வது வட்டம்**

அவைத்தலைவர் முனுசாமி செயலாளர் சண்முகம், துணைச் செயலாளர் ராமச்சந்திரன் பொருளாளர் லட்சுமணன் மேலமைப்புபிரதிநிதிகள் ராஜம், சுகுமார் சுதர்சன், மனோகரன் ஜெயபால், பூபதி.

**13வது வட்டம்**

அவைத்தலைவர் சைமன் செயலாளர் ஆறுமுகம் துணைச்செயலாளர் இருசப்பன், பொருளாளர் ஆறுமுகசாமி மேலமைப்புப் பிரதிநிதிகள் ஏ. ஆறுமுகம், குப்புசாமி, ஜெகதாம்பாள், சிவராஜ், தாமோதரன், பலராமன்,

**14-வது வட்டம்**

அவைத்தலைவர் எத்திராஜ் செயலாளர் ஆதிமூலம் துணைச்செயலாளர் முனுசாமி பொருளாளர்- காண்டீபன்.

மேலமைப்புப் பிரதிநிதிகள்- சுகுமாரன், விஸ்வநாதன், சுப்பிரமணி, டி. முனுசாமி, ஆண்டி அனுராதா.

**15வது வட்டம்**

அவைத்தலைவர் ஆர் எம். டி. சண்முகம், செயலாளர் சந்தானம், துணைச் செயலாளர் மேகநாதன், பொருளாளர் ராமமூர்த்தி மேலமைப்புப் பிரதிநிதிகள் அரங்கநாதன், ராதாகிருஷ்ணன், குமரன், செல்வகுமார், பாபு,

மல்லிகா குரோசி

**16 வதுவட்டம்**

அவைத்தலைவர்: பூபதி செயலாளர் சந்திரன் துணைச்செயலாளர்: ஈஸ்வரன், பொருளாளர் துரைப்பாண்டியன். மேலமைப்புப் பிரதிநிதிகள்: அற்புதமணி, அரசு ராதா, பெரியசாமி, மகேந்திரன். சகுந்தலா,

**17-வது வட்டம்**

அவைத்தலைவர்: நடராசன், செயலாளர்: மணி துணைச் செயலாளர்: முருகன்பொருளாளர்அர்ச்சுனன் மேலமைப்புப்பிரதிநிதிகள் பிரகாசம் ராஜேஸ்வரி முத்துக்குமார் அங்குசாமி துரைராஜ் வண்ணைசாரதி

**18வது வட்டம்**

அவைத்தலைவர் ப. சண்முகம், செயலாளர் டி. சங்கரபாபு, துணைச் செயலாளர் லோகநாதன், பொருளாளர் சங்கரன், மேலமைப்புப் பிரதிநிதிகள் கஸ்தூரி, நடராஜன், பழனி, வேம்புலி, விஸ்வநாதன் சண்முகம்.

**21-வது வட்டம்**

அவைத்தலைவர் கேசவன் செயலாளர் சுப்பராயலு, துணைச்செயலாளர் கதிர்வேலு, பொருளாளர் ராஜி மேலமைப்புப் பிரதிநிதிகள் ராமநாதன், சாமி, தேவேந்திரன், பாலசுந்தரம் மோகன், வசந்தகுமாரி

**26-வது வட்டம்**

அவைத்தலைவர்- செல்வமூர்த்தி, செயலாளர்- மணி, துணைச் செயலாளர் ந. துரைராஜ், பொருளாளர்- ஆனந்தன். மேலமைப்புப்பிரதிநிதிகள் கோபி. கல்யாணசுந்தரம், புருஷோத்தமன், லோகநாயகி, மோகன், ராம்மோகன்.

### தலைமைக்கழக அறிக்கை

# நீலகிரி மாவட்டம்

23-11-80 அன்று நீலகிரி மாவட்டத்தில் கீழ்கண்ட ஒன்றியங்களில் குறிப்பிட்ட இடங்களில் தேர்தல் நடைபெறும்.

1. ஊட்டி நகரம் - ஊட்டி கூட்டுறவு விருந்தினர் மாளிகை
2. ஊட்டி ஒன்றியம் - „
3. குன்னூர் ஒன்றியம் - குன்னூர் பொதுப்பணித் துறை பயணியர் மாளிகை
4. குன்னூர் நகரம் - குன்னூர் நகராட்சி பயணியர் விடுதி
5. கோத்தகிரி ஒன்றியம் - நெடுஞ்சாலை பயணியர் விடுதி கோத்தகிரி
6. கூடலூர் ஒன்றியம் - பெல்வெடேர் லாட்ஜ் கூடலூர்

எம். எஸ். அப்துல்காதர்
தலைமை நிலையச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க

சென்னை-14,
18 11-80.

### அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

# தலைமைக் கழக அறிக்கை

திருச்சி புதுக்கோட்டை, கோவை பெரியார் சேலம், தென் ஆற்காடு ஆகிய மாவட்டங்களுக்கு 30—11—80 அன்று மாவட்டச் செயலாளர் பொறுப்புக்கும் ஒன்றிய அமைப்புகளுக்கும் தேர்தல் நடைபெறும்.

மாவட்டச் செயலாளர் பொறுப்புக்கு 23—11—80 அன்று கீழ்க்கண்ட தேர்தல் அதிகாரிகளிடம் வேட்பு மனுவை நேரிலோ அல்லது முன்மொழிபவர் மூலமாகவோ உரிய கட்டணத்தை கொடுத்து தாக்கல் செய்யவேண்டும்.

| மாவட்டம் | இடம் | தேர்தல் அதிகாரி |
|---|---|---|
| திருச்சி | திருச்சி நகரம் பயணியர் விடுதி | முனு ஆதி |
| புதுக்கோட்டை | புதுக்கோட்டை நகரம் பயணியர்விடுதி | ஆனூர் ஜெகதீசன் எம். எல். ஏ |
| கோவை | கோவை நகரம் பயணியர் விடுதி | பட்டுராசன் |
| பெரியார் | ஈரோடு பயணியர் விடுதி | ச. ப. வெங்கடாசலம் |
| சேலம் | சேலம் நகரம் பயணியர்விடுதி | சௌந்தரராசன் எம். எல். ஏ முன்னாள் அமைச்சர் |
| தென் ஆற்காடு | கடலூர் பயணியர்விடுதி | கோவைதம்பி எம். எல். ஏ. |

ப. உ. சண்முகம்
பொதுச்செயலாளர்

## அவசர சட்டத்தை எதிர்த்து

# மாநிலங்களவையில் வெளிநடப்பு

## தி. மு. க. கலந்துகொள்ளவில்லை

புதுடெல்லி, நவ. 18- அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்படுவதை எதிர்த்து மாநிலங்களவையில் எதிர்க்கட்சிகள் வெளிநடப்பு செய்தன. ஆனால் அவசரச் சட்டம் பிறப்பிக்கப்படுவதை ஆதரிக்கும் வகையில் தி. மு. க. இந்த வெளிநடப்பில் கலந்துகொள்ளவில்லை.

நாடாளுமன்றக் கூட்டம் நேற்று தொடங்கியது.

மக்களவையில் பல ஒத்திவைப்புத் தீர்மானங்களைக் கொண்டுவர உறுப்பினர்கள் முயன்றனர்.

சபாநாயகர் பலராம் ஜாக்கரிடம் ஏராளமான ஒத்தி வைப்புத் தீர்மானங்கள் கொடுக்கப்பட்டன.

விலைவாசி உயர்வு, வகுப்பு வாதக்கலவரங்கள் ஆகியவை பற்றிய தீர்மானங்கள் அவை.

அவற்றை சபாநாயகர் விவாதத்துக்கு ஏற்றுக் கொள்ளாததால் எதிர்க் கட்சிகள் வெளிநடப்புச் செய்தன.

தி.மு.க., முஸ்லிம்லீக் ஆகிய கட்சிகள் மட்டும் இந்த வெளிநடப்பில்கலந்துகொள்ளவில்லை.

### ஒற்றுமை

மாநிலங்களவையும் நேற்று கூடியது. அங்கும் எதிர்க்கட்சிகள்வெளிநடப்பு செய்தன. அவசரச்சட்டங்கள் பிறப்பிக்கப் பட்டதை எதிர்த்துஎதிர்க் கட்சிகள் வெளி நடப்புச் செய்தன. உறுப்பினர்களைச் சமாதானப்படுத்தும் வகையில் அவைத்தலைவர் இதயதுல்லா பேசுகையில், அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்படுவதையும், அவசரச்சட்டத்தை வைத்து அரசு நடத்துவதையும் நான்விரும்பவில்லைஎன்றார்.

மக்களவையில் உள்ள ஏழு எதிர்க்கட்சிகள் சபைக்குள் ஒன்றுபட்டு செயல்பட முடிவு எடுத்துள்ளன.

லோக்தளம், அர்ஸ்காங்கிரஸ், மார்க்சிஸ்ட்கட்சி, இந்திய கம்யூனிஸ்ட்கட்சி, பாரதிய ஜனதா, ஜனதாக்கட்சி, பார்வர்டு பிளாக் ஆகிய கட்சிகள் இவ்வாறு முடிவுவெடுத்துள்ளன.

544 உறுப்பினர்கள் கொண்ட அவையில் இந்த 7 கட்சிகளின் பலம் 122.

மாநிலங்களவையில் வெளி நடப்பு நடந்த போது சுயேச்சை உறுப்பினர் தேசிய பாதுகாப்பு அவசரச் சட்டத்தை கிழித்து எறிந்து விட்டு வெளியேறினார்.

நாடாளுமன்ற ஜனநாயகத்தின் சவப்பெட்டிக்கு அடிக்கும் கடைசி ஆணி இது என்று அந்த அவசர சட்டத்தை அவர்வர்ணித்தார்.

### கோவையில் அமைச்சர் குழந்தைவேலு பங்கேற்ற நிகழ்ச்சிகள்

கோயமுத்தூர், நவ 18- கோவை மாவட்டத்தில் உள்ளாட்சித்துறை அமைச்சர் ப. குழந்தைவேலு பல்வேறு நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு உரையாற்றினார்.

கருப்புசாமிக் கவுண்டர் இல்லத்தில் கழகத்தோழர் மாரிமுத்து-காந்திமதி திருமணத்தை நடத்திவைத்தார்

காங்கேயம் சட்டமன்ற உறுப்பினர்கே.சி.கிருஷ்ணசாமி, தாராபுரம் சட்டமன்றஉறுப்பினர் பெரியசாமிஉட்பட பலர் மணமக்களை வாழ்த்திப் பேசினர்.

உடுமலைப்பேட்டை நகர கழக துணைப்பொருளாளர் எம். ஆர். பி. பன்னீர் செல்வத்திற்கும் முல்லைக் கொடிக்கும் திருமணத்தை அமைச்சர் குழந்தைவேலு நடத்தி வைத்தார்.

## ஜெயன் மரணம்: புரட்சித் தலைவர் இரங்கல்

சென்னை, நவ.18- படப்பிடிப்பில் ஏற்பட்ட விபத்தில் நடிகர்ஜெயன்மரணம் அடைந்ததற்கு முதல்வர் புரட்சித்தலைவர் இரங்கல் தெரிவித்தார்.

"ஜெயன் நல்ல நடிகர். அவருடைய எதிர்பாராத மரணச் செய்தியைக் கேட்டு திடுக்கிட்டேன். அவர் குடும்பத்திற்கு என் ஆழ்ந்த அனுதாபங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்."

இவ்வாறு தென்னிந்திய நடிகர் சங்கத்துக்கு அனுப்பிய அனுதாபச் செய்தியில் தெரிவித்துள்ளார்.

## குழப்பம் செய்வோர்: முதல்வர் எச்சரிக்கை

கோவை, நவ. 18- போலீஸ் பொதுமக்கள் சமுதாய திட்டசேவை நிறைவு விழாவில் முதல்வர் புரட்சித்தலைவர் கலந்துகொண்டு உரையாற்றினார்.

கோவையில் நடைபெற்ற இந்த விழாவுக்கு அமைச்சர் அரங்கநாயகம் தலைமைவகித்தார்,

சிறப்பாக சேவைசெய்தவர்கட்குமுதல்வர்புரட்சித் தலைவர் பரிசுகளை வழங்கினார்.

இந்தவிழாவில் அமைச்சர் குழந்தைவேலு, முத்துசாமி ஐ.ஜி. பரமகுரு மாவட்ட ஆட்சித்தலைவர் சிவப்பிரகாசம் ஆகியோரும் கலந்து கொண்டு பேசினார்கள்.

விழாவில் முதல்வர்புரட்சித்தலைவர் பேசியதாவது:

முன்னாள் ராணுவத்தினர் ஊர் காவலராகப் பணியாற்றுகிறார்கள். பல்வேறு குற்றவாளிகளைக் கண்டு பிடித்துக் கொடுத்திருக்கிறார்கள்.

இத்தகைய பணி நாட்டுக்கு மிகமிகத் தேவை.

சமுதாயத்தில் குழப்பம் கலவரம் ஏற்படுத்தி அதை தங்கள் வளர்ச்சிக்குப்பயன் படுத்தும் சுயநல நோக்கம் கொண்டவர்கள் இருக்கிறார்கள்.

அத்தகைய சமுதாய விரோதிகள் சமூக துரோகிகள், ஜாதிவேறுபாடுகளைஉருவாக்குபவர்கட்கு இடம் தராமல் செய்வது நமது பொறுப்பாகும்.

சட்டங்கள் இருந்தாலும் மக்களுடைய ஒத்துழைப்பு தேவை.குறிப்பாக மாணவ மாணவிகள், இளைஞர்கள் நல்ல ஒத்துழைப்பைத் தர வேண்டும்.

தமிழக அரசின் செயல்களுக்கு ஆதரவு தர வேண்டும்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் பேசினார்.

## அமைச்சர் பொன்னையன் தகவல்

# கூட்டுறவுக் கடையில் கொள்ளையடித்து மூன்று கடைக்கு அதிபரானவர்

சென்னை, நவ. 18- கோவை சிந்தாமணி கூட்டுறவுக் கடையில் கொள்ளையடித்த ஒருவர் மூன்று கடைகளுக்கு முதலாளி ஆகியிருக்கிறார். இந்தத் தகவலை அமைச்சர் பொன்னையன் வெளியிட்டார்.

சென்னை பெசன்ட்நகரில் டி. யு. சி. எஸ். நிறுவனத்தின் சார்பில் காமதேனுவின்இரண்டாவதுகிளையை அமைச்சர் பொன்னையன் திறந்து வைத்தார்.

விழாவுக்கு குடிசை மாற்று வாரியத் தலைவர் டி. கே. கபாலிஎம்.எல்.ஏ. தலைமை வகித்தார். டி. சி. வேலுவரவேற்புரையாற்றினார். கூட்டுறவு பதிவாளர்டி..ஏ.எஸ்.பிரகாசம் தனியதிகாரி மோகன கிருஷ்ணன், ஆகியோர் கலந்துகொண்டு பேசினர்.

அமைச்சர்பொன்னையன் பேசுகையில் கூறியதாவது:

காமதேனுவின் கிளை எந்த அளவுக்கு இந்த பகுதியில் இன்றியமையாததாக இருக்கிறது என்பது மழையையும் பொருட்படுத்தாமல் மக்கள் கூடியிருப்பது காட்டுகிறது.

வாங்கி உண்ணுகின்றவர்களாக இருந்தாலும், உற்பத்தி செய்பவர்களாக இருந்தாலும், இரு சாராரும் நல்ல பலனடையவேண்டும் என்பதற்காகத்தான் கூட்டுறவு அமைப்புகள் ஏற்படுத்தப் பட்டன.

உற்பத்தி யாளர்களுக்கு நியாயவிலை கிடைக்க வேண்டும். வாங்கி உண்பவர்களுக்கு தரமான பொருட்கள் கிடைக்கவேண்டும். அந்த நிலையை கூட்டுறவுத் துறையைத் தவிர வேறு எந்த நிறுவனத்தாலும் தரமுடியாது.

### கொள்ளை லாபம்

தமிழகம் மட்டுமல்ல ஜனநாயக உணர்வுகளைப் பெற்ற பாரதத்தில் சமூக நலனைக் கருதாத ஒரு சதவிகிதம்பேர் தங்களுடைய சுய லாபத்தைக் கருதி பணத்தைக்கொண்டு குறைந்த விலையில் உற்பத்திப்பொருளை வாங்கி முடக்கிவைத்து செயற்கையான பற்றுக்குறையை ஏற்படுத்துகின்றனர். உற்பத்தியாளர்கட்கும் நியாயமான விலையைத்தருவதில்லை. செயற்கை பற்றுக் குறையை ஏற்படுத்தி கொள்ளை லாபம் அடிக்கின்றனர்.

கூட்டுறவு நிறுவனம் மக்களுக்காக மக்களால் ஏற்படுத்தப்பட்டது. மக்களிடம் விழிப்புணர்ச்சி ஏற்பட்டால் தான் குறைபாடுகளைக் களைய முடியும்.

தனியார்துறை தார்மீக அடிப்படையில் செயல்பட்டால் அது வரவேற்கத் தக்கதாக இருக்கும். பலரிடம் நியாய உணர்வு இல்லாததால் தான் உற்பத்தியாளர்களும் வாங்கி உண்பவர்களும் பாதிக்கப்படுகிறார்கள் உற் உற்பத்தியாளர்களுக்கு இவர்கள் தரும் பணம்சாகுபடி விலைக்கு கூட கட்டுப் படியாவதில்லை.

தொழிற்சாலை வைத்திருப்பவர்கள் தங்களின் உற்பத்தி பொருளுக்கு லாபம் வைத்து விலை நிர்ணயிக்கிறார்கள். ஆனால் விவசாயிகள் அப்படிச் செய்ய முடியவில்லை. இந்த அளவில் தான் 32 ஆண்டு கால சுதந்திரத்தில் பொருளாதாரம் வளர்ந்திருக்கிறது.

அதனால்தான் பணவீக்கம் ஏற்பட்டு பொருளாதார நிலை சீர்குலைந்திருக்கிறது.

### பொருளாதார சீர்குலைவு

சில சதவிகிதத்தினரே பாரதத்தின் பொருளாதார சீர்குலைவுக்கு காரணமாகும்.

சென்ற ஆண்டு தமிழகத்தில் நிலக்கடலை அபரிமிதமாக விளைந்தது, அதன்படி பார்த்தால் ஒருகிலோ எண்ணைமூன்றரைஅல்லது 4ரூபாய்க்குத்தான் விற்றிருக்கவேண்டும். ஆனால் 16ரூபாய்க்கு விற்றார்கள் 200சதவிகித லாபம் வைத்து கொள்ளை அடித்தார்கள் ஒரு சதவிகிதம இருக்கும் அவர்கள் 99சதவிகிதம் பேரை ஏய்க்கிறார்கள்

கூட்டுறவு அமைப்பிலுள்ள நுகர்வோர் இன்னும் சற்றுக் கவனமாக இருக்கவேண்டும்.

ஆனால் நம்மைவிட விஞ்ஞான ரீதியாக பொருளாதார அணுகு முறையில் செயல்படும் குஜராத் மராட்டிய மாநிலங்களில் கூட்டுறவு அமைப்பு சிறப்பாக இருக்கிறது. இந்த நிலை இன்னும் அதிகமாக வேண்டும் என்று அந்த மக்கள் விரும்புகிறார்கள்.

1904ம் ஆண்டு துவக்கப்பட்ட இந்த நிறுவனத்தில் பொருட்கள் குறைந்த விலையில் விற்கிறதா என்றால் இல்லை என்பதை ஒப்புக்கொள்ள வேண்டும்.

### 45 லட்சம் ரூபாய் நட்டம்

கடந்த 15 ஆண்டுகளில் டி.யு.சி.எஸ்.நிறுவனத்தில் இருப்புக் குறைவு என்ற கணக்கில் தவறு நடந்து வருகிறது. அதனால் 45 லட்ச ரூபாய் நட்டம் ஏற்பட்டிருக்கிறது.

சர்க்கரைப் போன்ற பொருட்களை இடம்மாற்றுவதால், எலிபோன்றவை கடிப்பதால் நட்டம் ஏற்படலாம். மாத்திரை பிரிவில் எப்படி நட்டம் ஏற்படும்?

அந்த நட்டங்களை சரி செய்ய 5சதவிகிதம் தள்ளுபடி, அளிக்கப்படுகிறது. அதற்கு மேலும் நட்டம்காட்டினால் எப்படி சமாளிக்க முடியும்? இப்படிச் செய்வது கூட்டுறவு அமைப்பையேமூழ்கடிக்குத்துவது போலாகும் இதை ஆலோசனைக் குழு கண்காணிக்க வேண்டும்.

### கோவையில் அடித்த கொள்ளை

இத்தகைய கிரிமினல் குற்றத்தை செய்துவிட்டு சட்டத்தின் ஓட்டையால் தப்பித்துக் கொண்டிருக்கிறார்கள்.

சீனு போன்ற நாடுகளில் இதுபோன்ற தவறுகள் நடந்தால் அவர்களை ரோடில் நிறுத்தி சுட்டுவிடுவார்கள்.

இதுபோன்றசெயல்களில் தெரிந்தே அதிகாரிகள் மெத்தனமாக உடந்தையாக, இருந்தால் அரசு கடும் நடவடிக்கை எடுக்கும்.

கோவையிலுள்ள சிந்தாமணியில் தவறு நடப்பதாக புகார்கள் வந்தன. சோதனை நடத்தியபோது மருந்து பிரிவிலிருந்த ஒருவர் மாதம் 15ஆயிரம் ரூபாய்க்கு கொள்ளையடித்திருக்கிறார். ஏழையாக இருந்தவர். பணக்காரராக மாறியிருக்கிறார், ராஜினாமச் செய்துவிட்டு மூன்று பெரியமருந்துகடைகளுக்கு அதிபராக இருக்கிறார்.

மக்களுக்கு சொந்தமான கூட்டுறவு அமைப்பில் சில பதர்களின் செயல்களால் பாதிக்கப்படுகிறது.

சிலர் செய்கின்ற தவறால் எல்லோருக்கும் கெட்ட பெயர் ஏற்படுகிறது. நல்ல அதிகாரிகள் அத்தகைய குற்றங்களைகண்டுபிடித்துஅரசுக்கு தெரிவிக்கவேண்டும்.

இவ்வாறு அமைச்சர் பொன்னையன் கூறினார்.

## உண்மையான தேசபக்தி எது? டாக்டர் ம.பொ.சி. பேச்சு

சென்னை, நவ. 18-"மக்கள் அரசுக்கு ஒத்துழைப்பு தருவதே உண்மையான தேசபக்தி ஆகும்" என்று சிலம்புச் செல்வர் டாக்டர் ம.பொ.சி. பேசினார்.

27- வது அனைத்திந்திய கூட்டுறவு வார விழா சென்னையிலுள்ளவள்ளுவர் கோட்டத்தில் கொண்டாடப்படுகிறது.நேற்று நுகர்வோர் பாதுகாப்பு நாள் நடந்தது.

சிலம்புச் செல்வர் டாக்டர் ம.பொ.சி. சிறந்தகூட்டுறவுச் சங்கங்களுக்கு கேடயம் வழங்கி பேசினார். நெ, து. சுந்திரவடிவேலு தொடக்கவுரையாற்றினார்

"சமுதாய முன்னேற்றத்திற்கு ஏற்றது தனியார் துறையா? கூட்டுறவு முறையா?" என்ற தலைப்பில் பட்டி மன்றம் நடந்தது.

### மறுப்பு ஏன்?

டாக்டர் அவ்வை நடராசன் நடுவராக இருந்து பேசினார். பி. செல்வகணபதி மறைமலை. செ. சுப்பிரமணியம், கே. கண்ணன் மணிமொழி ராமச்சந்திரன் ஆகியோர் பேசினர்.

முன்னதாக சரஸ்வதி சீனிவாசன் அனைவரையும் வரவேற்றுப் பேசினார். தமிழ்நாடு மாநில நுகர்வோர் கூட்டுறவு இணையத்தின் தனி அதிகாரி ஆர். வேலு நன்றி கூறினார்,

சட்ட மேலவைத்தலைவர் டாக்டர் ம. பொ. சி. பேசுகையில் கூறியதாவது:

மக்கள் தேவைகள் அனைத்தையும் நிறைவேற்றும் நிலையில் கூட்டுறவு இயக்கம் இருந்தால் நாடு வளம் பெறும்.

மக்கள் நம்பிக்கையை அடிப்படையாக கொண்டு இயங்குவது இந்தஇயக்கம் அது அழிந்தால் மக்களுக்குத்தான் கஷ்டம்,

பண்டம், எடை, தரம் இந்த மூன்றுக்கும் கூட்டுறவு என்கிறார்கள், இங்கு தான் கூடுதலாக உத்தரவாதம், நாணயம் இருக்கிறது.

கூட்டுறவுவங்கி கொடுக்கும் கடன் திரும்பி வந்தால்தான் மற்றவர்களுக்கும் கொடுக்க முடியும். கடனை கட்ட மறுத்தால் வங்கிகள் எப்படி நடக்கும்? அது கூட்டுறவு என்றஆணி வேருக்கே வைத்த அடியாகும்.

விவசாயிகள் தங்கள் அபிவிருத்திக்காக கடன் வாங்குகிறார்கள். கடனில் டிராக்டர் வாங்கி தன் நிலத்தை மட்டுமல்ல, மற்றவர்களின் நிலங்களையும் உழுகின்றனர்.

பின்னர் வங்கிகளின் கடன்களை கொடுக்க மாட்டேன் என்றால் எப்படி? வாங்கிய கடன்களை கொடுக்க மறுப்பது பாவம்.

அந்த நிலை வளருமானால் சமுதாய கட்டுக் கோப்பை அது உடைக்கும்.

நிலப்பிரபுக்கள் மீது நிலமற்ற ஏழை விவசாயிகள் பாய ஆரம்பித்தால் என்ன நிலை ஏற்படும். எங்களுக்கு நிலங்களைத் தாருங்கள் என்று நிலமற்றவர்கள் எண்ணினால் வர்க்கப் போராட்டம் ஏற்படும்,

சமுதாயத்தில் தாங்க முடியாத தேவையற்ற பளு நிலப்பிரபுக்கள் சமுதாயம் என்றார் நேரு.

தமிழ்நாட்டவர்கள் தமிழ் பண்பாடுக்கு ஏற்ப நடக்கவேண்டும். நான் வாழ்வதுதான் முக்கியம் என்று நினைக்கக்கூடாது.

இப்பொழுதெல்லாம் சுலபமாக தலைவர்களாகி விடுகிறார்கள் வாங்கிய கடனை கொடுக்காதே என்றால் தலைவர்ஆகி விடுகிறார்கள். இப்படிசுலபமாக தலைவர்பதவி கிடைப்பதை மக்கள் அனுமதிக்கக்கூடாது வங்கிகளும் கூட்டுறவு இயக்கத்தில் இருப்பதால் சொல்லவேண்டியதை சொல்லவேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

### நம்முடைய ஆட்சி

நமதுநாடுசுதந்திரம்பெறுவதற்கு முன்னர் அன்னியர் ஆட்சிக்கு எதிராக நடப்பதே தேச பக்தியாகஇருந்தது.

இன்றுள்ள ஆட்சி நம்முடையது. அந்த ஆட்சிக்கு உதவுவதுதான் உண்மையானதேசபக்தி ஆகும்.

இவ்வாறு சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ. சி. பேசினார். பின்னர் மெரினாவின் "சாமியாரின் மாமியார்", என்ற நாடகம் நடந்தது,

## பண்டகசாலை ஊழியர்களுக்கு போனஸ்

சென்னை, நவ. 18- தமிழ்நாடு அரசு பொதுப் பணித்துறை, பணிமனை பண்டகசாலை தொழிலாளர்களுக்கு கடந்த ஆண்டுக்கு ஒருமாத போனஸ் தருவதுடன் 800 தொழிலாளர்களுக்கு ஊக்க போனசாக ரூ. 50 தரப்படும்.

நிர்வாக இயக்குனரிடம் சங்க நிர்வாகிகள் நடத்திய பேச்சுவார்த்தையில் இவ்வாறு போனஸ்நு ஒப்புக்கொள்ளப்பட்டது.

வை. பெருமாளுக்கும், சா. கணேசனுக்கும் சங்கத்தொழிலாளர்கள் சார்பில் பொதுச்செயலாளர் நாமதேவன் நன்றி தெரிவித்துள்ளார்.

(2ம் பத்தி தொடர்ச்சி)

னார்கள்.

விழாவின் இறுதியில் ராணுவ வீரர்கள் 'எம். ஜி. ராமச்சந்திரனுக்கு ஜே'' என்று முழக்கமிட்டனர்.

நிகழ்ச்சியில் அமைச்சர்கள் அரங்கநாயகம், குழந்தைவேலு, முத்துசாமி ஆகியோரும் ஜேப்பியாரும் கலந்து கொண்டனர்.

ராணுவ வீரர்களுடன் அமர்ந்து முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று பகல் உணவு சாப்பிட்டார்.

வீரர்கள் மத்தியில் அவர்களுடன் அளவளாவியபடி சாப்பிட்டார்.

சாப்பிட முதல்வர் புரட்சித்தலைவர் வந்த போதும்சாப்பாடு முடிந்து வெளியே வந்த போதும் ராணுவ வீரர்கள் 'எம்.ஜி. ராமச்சந்திரனுக்கு ஜே" என்று பலதடவை முழக்கமிட்டனர்.

## சிறந்ததாக தேர்வுபெற்ற ராணுவ பிரிவுக்கு புரட்சித் தலைவர் ரூ.25000 நன்கொடை

கோவை, நவ. 18— கோவை 110வது காலாட்படைப் பிரிவுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் முதலமைச்சர் நிதியிலிருந்து ரூ. 25 ஆயிரம் வழங்கிப் பாராட்டினார்.

கோவை 110வது காலாட்படைப் பிரிவு தென் இந்திய ராணுவப் பிரதேசசேனைகளில் சிறந்த சேனையாக தேர்ந்து எடுக்கப்பட்டுள்ளது.

அதற்கான கொடியை முதல்வர் புரட்சித்தலைவர் நேற்று வழங்கினார். இதற்கான விழாநேற்றுகோவையில் நடந்தது.

விழாவினைஒட்டி 110வது காலாட்படைப் பிரிவு அளித்த அணிவகுப்பு மரியாதையை முதல்வா புரட்சித்தலைவர் ஏற்றார்.

திறந்த ஜீப்பில் மேஜர் ஜெனரல் எஸ். பி. மகாதேவன், லெப்டினன்ட் கர்னல் ஆர். ராஜனுடன் சென்று அணிவகுப்பினைப் பார்வையிட்டார்.

### மழையில் நனைந்து...

மழை தூறிக்கொண்டே இருந்தது. மழையில் நனைந்தபடியேஅணிவகுப்பு மரியாதையை ஏற்று அணிவகுப்பையும் புரட்சித்தலைவர் பார்வையிட்டார்.

மேஜர் ஜெனரல் எஸ். பி. மகாதேவன் முதல்வர் புரட்சித்தலைவரை வரவேற்றுப் பேசினார்.

முன்னாள் ராணுவத்தினருக்கும் இன்னாள் ராணுவத்தினருக்கும் தமிழக அரசு மற்ற மாநிலங்களுக்கு வழிகாட்டியாகப் பல நன்மைகளை செய்து வருகிறது.

இந்தப் பட்டாளத்திற்கு ரூ. 25ஆயிரம் நன்கொடை வழங்க முன் வந்துள்ளார் என்று மகாதேவன குறிப்பிட்டார்.

கொடியை வழங்கி முதல்வர் புரட்சித்தலைவர் பேசியதாவது:

நாட்டையும் நாட்டு சுதந்திரத்தையும் மக்களையும் பாதுகாக்கும் பணியில் ஈடுபட்டு இருக்கிறீர்கள்.

உங்களைப் பார்த்தால் மகிழ்ச்சி ஏற்படுகிறது. உங்களைப் பார்க்கும் போது நோய் கூட தீருகிறது.

முன்னாள் ராணுவத்தினரும், இன்னாள் ராணுவத்தினரும் கடமை ஆற்றுவது எங்களுக்காக அல்ல. நாட்டுக்காக.

இந்தப் பயிற்சியில் நீங்கள் வெற்றிபெறவேண்டும் அது நாட்டுக்குப் பயன் உள்ளதாக அமைய வேண்டும்.

இந்த நேரத்தில் 25 ஆயிரம் ரூபாயை முதலமைச்சர் நிதியில் இருந்து வழங்குகிறேன் என்றால் அது என் பணம் அல்ல.

மக்கள் தந்த வரிப்பணம் உங்களுக்கு சொந்தமான பணம் நீங்கள் பெறுகிறீர்கள்.

உங்களது துணிவு ஆற்றல் பெருக வேண்டும்.

பயிற்சித்திறன் பளிச்சிட்டுத்திகழவேண்டும் நம் ராணுவம் வேறு எந்த நாட்டுக்கும் தலைவணங்காது என்றநிலை உருவாகப் பாடுபடுங்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவா கூறினார்.

இந்தப் படையின் சார்பில் முதல்வர் புரட்சித் தலைவருக்கு நினைவுப்பரிசு வழங்கப்பட்டது.

அமராவதிநகர் சைனிக் பள்ளி மாணவர்கள் உடற்பயிற்சி செய்து காட்டினார்கள்.

சர்க்கஸ் வீரர்களைப் போல பல சாகச செயல்களை செய்து காட்டினார்கள்.

என். சி. சி. பிரிவினர் மாதிரி விமானங்களைப் பறக்கவிட்டுக் காட்டினார்கள்.

### ஆதிவாசிகள் ஆடிப்பாடி நடனம்

நீலகிரி ஆதிவாசிகள் கொம்பு, மற்றும் வாத்தியக்கருவிகளுடன் ஆடல் நிகழ்ச்சியை நடத்திகாட்டி

(4-ம் பத்திபார்க்க)

# அண்ணா




### தபால் தந்தி இலாகா

நிர்வாகப் பொறியாளர், தபால்தந்தி சிவில் டிவிஷன் எண் II. சென்னை 600 105, அவர்களால், தகுதிவாய்ந்த அங்கீகரிக்கப்பட்ட காண்ட்ராக்டர்களிடமிருந்து சேலம் செவ்வாய்ப்பேட்டை (பாகம் II)யில்உள்ள தொலைபேசி நிலைய கட்டிடத்தின் தொழில்நுட்ப பிளாக்மீது சர்வீஸ் கோருக்குடைய Lateral Extension உடன் மூன்றுவது மாடி கட்டுவதற்கு இனவாரியான டெண்டர்கள்28-11-80 பிற்பகல் 3 மணிவரை வரவேற்கப்படுகின்றது. E. C. ரூ. 7,85,068 டேவணித் தொகை ரூ. 15,701- டெண்டர்கள் அதே தினம் பிற்பகல் 3-30மணிக்கு திறக்கப்படும் டெண்டர்பத்திரங்கள் மற்றும் நிபந்தனைகள் ஆகியவை இந்த அலுவலகத்திலிருந்து ரூ. 41.70க்கான ஒரிஜினல் என்லிஸ்ட்மெண்ட் சர்டிபிகேட் மற்றும் வருமான வரி கிளியரன்ஸ் சர்டிபிகேட் ஆகியவற்றை செலுத்திபெற்றுக்கொள்ளலாம் டெண்டர் பத்திரத்திற்கான தொகையைரொக்கமாகவோ அல்லது சென்னை-600 105, தபால் தந்தி இலாகா சிவில் டிவிஷன் எண் II அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் அவர்களுக்கு மணியார்டர் மூலம் செலுத்தி பெற்றுக் கொள்ளலாம்.

DAVP-710 (1197) 80

## வீடுகட்கு மின்வெட்டு இல்லை: அமைச்சர் பண்ருட்டி அறிவிப்பு

சென்னை, நவ. 18—தமிழகத்தில் மின் உற்பத்தி குறைந்துள்ளதால் விரைவில்மின்வெட்டு வர இருக்கிறது. ஆனால் வீடுகளுக்கு மின் வெட்டு வராது என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

மின் வெட்டு 30 சதவிகிதம் வருவது குறித்து தொழில் அதிபர்களுடன் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் நேற்று ஆலோசனை நடத்தினார்.

கூட்டம் நடந்தபிறகு அமைச்சர் பேட்டியளித்த போது கூறியதாவது:

இந்தக் கூட்டத்தில் தொழில் அதிபர்கள் தங்கள் கருத்துக்களை கூறும் போது கடைசி மாதங்களில் அதிக சதவீத மின் வெட்டு கொண்டுவந்து, தொழிற்சாலைகள் சங்கடப்படுவதைவிட, இப்போது இருந்தே முப்பது சதவிகித மின்வெட்டை ஒரே சீராக அடுத்த ஆண்டு ஜூன்வரை நடைமுறைப் படுத்தினால் தொழிற்சாலைகளுக்கு சிரமம் இருக்காது. அதற்கு சம்மதிக்கிறோம் என்றார்கள்.

அத்துடன் தொடர்ச்சியாக இயங்கும் தொழிற்சாலை, தொடர்ச்சியற்று இயங்கும் தொழிற்சாலை என்று வேறுபாடு வேண்டாம் மின்சாரவினியோகத்தில் "லோடு ஷெட்டிங்" (ஒரு குறிப்பிட்ட பகுதிக்கு குறிப்பிட்ட நேரத்தில் மின்சாரம் வழங்குவது) முறையை சீராக வகுத்து அந்த நேரத்திலும் மின்சார சப்ளையை தடை இல்லாமல் கொடுத்து விட்டால் தொழிற்சாலைகள் தங்களுடைய சொந்த மின்சார உற்பத்தி இயந்திரங்களை தக்கநேரத்தில் பயன்படுத்திக்கொள்ள முடியும் என்றும் தெரிவித்தார்கள்.

### பற்றாக்குறை

மொத்தத்தில் தமிழ் நாட்டில் 90 கோடி யூனிட் மின் உற்பத்தி பற்றாக் குறையாக இருக்கிறது. கேரளாவில் உள்ள இடுக்கியில் இருந்து வரும் உபரி மின்சாரத்தையும் தமிழ் நாட்டுக்கு கொடுக்க சம் மதித்து இருக்கிறார்கள்.

### மூன்று தொழில் விதி விலக்கு

கேரளாவுக்குத் தேவையான சிமெண்டு அலுமினியம்டயர்போன்றவைகளுக்காக தமிழ்நாட்டில் அவற்றை உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகளுக்கு அவர்கள் கூடுதல் மின்சாரம் கொடுக்க முன் வந்து இருப்பதால் அந்த 3 வகை தொழிற்சாலைகளுக்கு மின்வெட்டு இருக்காது.

### வீட்டுக்கு இல்லை

அத்துடன் வீடுகளுக்கு மின்சாரவெட்டுகிடையாது

தொழில் அதிபர்கள் தெரிவித்த கருத்துக்களின் அடிப்படையில் மின் வெட்டு பற்றிஅரசுஉடனே முடிவு எடுத்து முதலமைச்சர்சென்னை திரும்பியதும்:அவர்ஒப்புதல் பெற்று உடனே செயல்படுத்தப்படும்.

### கிராமங்களில்

கிராமப்புற மின்சாரவினியோகப் பகுதியோடு இணைக்கப் பட்ட உயர் அழுத்த மற்றும் குறைந்த அழுத்தமின் சாரத்தை பயன் படுத்தும் தொழில்களுக்குஏற்கனவே முறைகள் வைத்து மின்சாரம் வழங்கப்படுவதால் அந்தத் தொழில்களுக்கு மின்வெட்டு இல்லை.

மற்றபடி எல்லா உயர் அழுத்த மின்சாரம் உபயோகிப்போருக்கும், குறைந்த அழுத்தத்தில் 75 குதிரை சக்திக்கு மேல் மின்சாரத்தை பயன் படுத்துவோருக்கும் இந்த மின் வெட்டுஉண்டு.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.

முதல்வர் புரட்சித் தலைவர் விளக்கம்

## புதிதாக வரும் கிராம அதிகாரிகட்கு சலுகைகள் என்ன?

கோவை, நவ. 18—புதிதாக நியமிக்கப்பட இருக்கும் கிராம அதிகாரிகளுக்கு, முழு நேரஊழியர்களுக்கு என்ன என்ன உரிமைகள் கிடைக்குமோ அவைகள் அனைத்தும் கிடைக்கும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார்.

கோவையை அடுத்துள்ள வெள்ளலூரில் மருத்துவமனை திறப்பு விழாவில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறியதாவது:

இப்போது கிராம அதிகாரிகள் பதவிகள் இல்லை. இனிஇருக்காது (கைதட்டல்) ஏன் அவர்களை மாற்றினேம் என்பதற்கு உங்கள் கைதட்டலே போதும்.

எவ்வளவு துன்பப்பட்டு இருப்பீர்கள் என்பதற்கு இதை விட வேறு உதாரணம் தேவை இல்லை.

கிராம அதிகாரிகளில் சிலர் நல்லவர்களாக இருந்து இருக்கலாம்ஆனால் பலர் எதேச் சாதிகாரிகளாக இருந்து இருக்கிறார்கள்.

கிராம அதிகாரிகளை திடீர் என்று நீக்கியதாகச் சொல்கிறார்கள். நல்லதைச் செய்ய நேரம் காலமா பார்க்கவேண்டும்.

(கைதட்டல்)

100 ஆண்டு காலமாக இருந்த ஒரு அமைப்பு சிலமணி நேரத்தில் மாற்றப்பட்டது. அந்தப்பெருமைக்குரியது கழக அரசாகும்!

எதிர்காலத்தில் இந்தப் பதவிகள் எப்படிப்பட்டவர்களுக்குத் தரப்படும்?

குறிப்பிட்ட அளவுபடித்தவர்கள் வேலையற்ற இளைஞர்கள் நியமிக்கப்படுவார்கள்.

அவர்கள் முழுநேரஊழியர்களாக இருப்பார்கள்.

முழுநேர ஊழியர்கட்கு என்ன என்ன உரிமைகள் உண்டோ அவைகள் அனைத்தும் இவர்களுக்குக் கிடைக்கும்.

தவறு செய்தால் நீக்கம் அல்லது மாற்றம் செய்யப் படுவார்கள்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் கூறினார்.

இந்திய

## கிரிக்கெட் குழு ஆஸ்திரேலியா புறப்பட்டது

சென்னை, நவ. 18- ஆஸ்திரேலியா நியூசிலாந்து நாடுகளுடனை கிரிக்கெட்டெஸ்ட்போட்டிகளில் விளையாட உள்ள இந்திய கிரிக்கெட் அணி நேற்று காலை சென்னையில் இருந்து புறப்பட்டது.

16 பேர் கொண்ட இந்தியஅணிக்கு கவாஸ்கர் காப்டனாக சென்றுள்ளார்.

கொச்சியில்

## நக்சல்பாரி-போலீஸ் மோதல்: 58 பேர் கைது

கொச்சி' நவ. 18-நக்சல் பாரிகளுக்கும், போலீசாருக்கும் ஏற்பட்ட மோதலில் 3 போலீசார் படுகாயமடைந்தனர், இச்சம்பவம் கேரள மாநிலத்திலுள்ள கொச்சியில் நடைபெற்றது, நக்சல்பாரிகள் நடத்திய கருத்தரங்கு கூட்டத்தில் போலீசார் புகுந்த போது இந்த மோதல் ஏற்பட்டது.

இது குறித்து போலீசார் 58 பேரை கைது செய்துள்ளனர்.



அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

## சென்னை மாநகரக் கழகத் தோழர்கள் கவனத்திற்கு

நடைபெற்று முடிந்த கிளைக் கழகத் தேர்தலில் எந்த ஒரு கிளையின் தேர்தல் சம்பந்தமாக மறு எண்ணிக்கை வேண்டும் என்று சம்பந்தப்பட்ட வேட்பாளர் யாராவது விரும்பினால் ரூ. 100 கட்டணமாகக் கட்டி கோரிக்கையை எழுத்து மூலம் பொதுச்செயலாளர் அவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும்.

பொதுச்செயலாளர் அவர்கள் பின்னர் ஒரு தேதி குறிப்பிட்டு அன்றைய தினம் மறுஎண்ணிக்கை நடத்த ஆணையிடுவார்.

எம். எஸ். அப்துல்காதர்

சென்னை-14
18-11-80

தலைமை நிலையச் செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி. மு. க.

## தலைமைக் கழக அறிக்கை

கிளைக் கழகத் தேர்தல்கள் 16-11-80ம் தேதியோடு முடிவடைந்து விட்டன. தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள கிளைக் கழக - வார்டு - நகரிய - பேரூராட்சி செயலாளர்களும் மேலமைப்புப்பிரதிநிதிகளும் மட்டும் கழகத்தின் அடிப்படை வாக்காளர்கள் ஆவார்கள். இவர்கள்தான் ஒன்றிய - நகர சென்னையில் பகுதி அமைப்பு நிர்வாகிகளையும், மாவட்டச் செயலாளர்களையும், கழகப் பொதுச்செயலாளரையும் தேர்ந்தெடுக்கும் வாக்காளர்கள் ஆவார்கள்.

ஒன்றிய - நகரக் கழக - சென்னை பகுதிக் கழகச் செயலாளர்கள், தேர்ந்தெடுக்கப்படும் மாவட்டக் கழகப் பிரதிநிதிகளும் அந்தந்த மாவட்டக் கழக உறுப்பினர்கள் ஆவார்கள். மாவட்டச் செயலாளர் தவிர இதர நிர்வாகிகளையும் பொதுக்குழு உறுப்பினர்களையும் இவர்கள் தேர்ந்தெடுப்பார்கள்.

பொதுக்குழு உறுப்பினர்கள், பொதுச்செயலாளர் தவிர, தலைமைக் கழக இதர நிர்வாகிகளைத் தேர்ந்தெடுப்பார்கள்.

கிளைக் கழகச் செயலாளர்கள், பேரூராட்சி கிளை, நகரிய கிளை, நகர உட்கிளை செயலாளர்கள், சென்னையில் வட்டக்கிளை செயலாளர்கள், அந்தந்த ஒன்றிய, நகர, சென்னையில் பகுதிகழக செயற்குழுஉறுப்பினர்களாவார்கள்.

ஒன்றிய - நகர - சென்னை பகுதி கழகச் செயலாளர்கள் அந்தந்த மாவட்டங்களின் செயற்குழு உறுப்பினர்கள் ஆவார்கள்.

மாவட்டச் செயலாளர்கள் தலைமைக் கழகத்தின் செயற்குழு உறுப்பினர்கள் ஆவார்கள். இவர்களல்லாமல் பொதுச்செயலாளர் மேலும் சிலரை செயற்குழு உறுப்பினர்களாக நியமிப்பார்.

ப. உ. சண்முகம்

சென்னை - 14
18 - 11 - 80

பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு.க.

மழையினால் பாதிப்பு

## சென்னையில் 15,000 பேருக்கு உணவு: மாநகராட்சி தந்தது

சென்னை, நவ. 18- மழையினால் சென்னையில் பாதிக்கப்பட்ட மக்கள் 15 ஆயிரம் பேருக்கு மாநகராட்சி உணவுப் பொட்டலங்களை வழங்கியது.

சென்னை மாநகராட்சி தனி அதிகாரி ஒ. ராமச்சந்திரராவ் நிருபர்களிடம் கூறியதாவது:

சென்னையில் பெய்த மழையினால் வடசென்னை பகுதியில் கொளத்தூர், வியாசர்பாடியில் உள்ள புதுநகர்,செம்மண்பேட்டை கிள்ளியூர் அண்ணா நகர், வ. உ. சி. காலனி, தென் சென்னை பகுதியில் சாலி கிராமம் மேற்கு சைதாப் பேட்டை அருகே உள்ள சேகர் நகர், அடையாறு அருகே உள்ள கக்கன் காலனி, லோகநாதன் காலனி அசோக்நகர்18வது அவின்யூ ஆகிய பகுதிகளில் குடிசைகளுக்குள் தண்ணீர் புகுந்துவிட்டது.

இதனால் அந்தப்பகுதிகளில் உள்ள மக்கள் ஆங்காங்கேஉள்ளமாநகராட்சி பள்ளிக்கூடங்களில் தங்கியுள்ளனர்.

அவர்களுக்கு பிற்பகலில் 15 ஆயிரம் உணவுப்பொட்டலங்கள் வழங்கப்பட்டன

சென்னை பெரம்பூர்பேப்பர் மில் சாலையில் தண்ணீர் தேங்கிக் கிடந்தது,

இதனால் சாலை அருகே பள்ளம் தோண்டி குழாய்போட்டு தண்ணீர் வேறு இடத்திற்குத் திருப்பிவிடப்பட்டது.

இவ்வாறு மாநகராட்சி தனி அதிகாரி ராமச்சந்திர ராவ் கூறினார்.




Published by K. Ravindran on behalf of Thangamani Publications, 275, Avvai Shanmugam Salai, Madras-14 and Printed by him at Print House, 1, first Main Road, United India Colony, Madras-24.
Editor: E. PARASURAMAN